உ

சிவமயம்.

# சிவபூசாவிதி.



அச்சுவேலி

சரஸ்வதிவித்தியாசாலை மனேசர்

**சிவஸ்ரீ. ச. குமாரசுவாமிக்குருக்கள்**

அவர்களால் பரிசோதித்து,

ஷை குருக்களவர்களின் புத்திரர்

சிவஸ்ரீ. வைத்தீசுவரக்குருக்களால்

பருத்தித்துறை

**கலாநிதியந்திரசாலையில்**

அச்சிட்டுப் பிரசுரிக்கப்பெற்றது.

இரண்டாம் பதிப்பு.

துர்முகிஞு ஆவணிமீ,

1956 ] [விலை சதம் 50.

சிவமயம்.

# உபோற்காதம்.

ஆன்மாக்களுக்கு ஆணவமாகிய மூலமல காரணத்தினலே கன்மானுசாரமாக உண்டாகும் பிறப்பு அண்டசம் சுவேதசம் உத்பிச்சம் சராயுசம் என நால்வகைப்படும். இவைகளின் விரிவு எண்பத்து நான்கு நூறுயிரம் யோனி பேதமாகும். இவ்வாறுள்ள யோனிகளுள் மற்றை யோனிகள் எல்லாவற்றையும் போகத்தினலும் பிராயச்சித்தம் முதலியவற்றினலும் நீக்கி, மனிதப்பிறப்பிலே வருதல் மிகுந்த அருமையாகும். இந்த அருமையாகிய மனிதப்பிறப்பைத் தந்தது பசுபதியாகிய சிவனை மனசினலே நினைத்தற்கும் வாக்கினலே துதித்தற்கும், கைகளினலே பூசித்தற்கும் கால்களினலே வலம்வருதற்கும், தலையினலே வணங்குதற்கும், செவிகளினலே அவரது புகழைக் கேட்பதற்கும், கண்களினலே அவரது திருமேனியைத் தரிசித்தற்குமாம். மேலுலகத்துள்ள பிரமா, விட்டுணு முதலிய தேவர்களும் இப்பூமியிலே வந்து சிவபெருமானை அருச்சிப்பார்கள். ஆதலால், கிடைத்தற்கரிய இச்சரீரம்உள்ளபொழுதே சிவபூசை பண்ணிப் பரம புருஷார்த்தத்தை அடைதல்வேண்டும்.

"இப்படி எவன் பக்தியினேடு சிவனைப் பூசிக்கிருனே அவனுக்கு ஆதித்தியோதயத்தினல் இருள் நீங்குதல்போலப் பாபம் உண்டாவதில்லை; அவனுக்கு உற்பாதங்களும் கிரக பீடைகளும் அழிகின்றன; எல்லா வியாதிகளும் நீங்கப் பெற்றவனகின்ருன்; சிவசாயுச்சியத்தை அடைகிருன்" என்று சிவபூசையின் பயன் சொல்லப்பட்டிருக்கிறது.

"வண்டுளருந் தண்டுழாய் மாயோ னிறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பு
மண்டர்தொழ வாழுன் னிறுமாப்பு மாலால
முண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்"

என்று திருவிளையாடற் புராணம் கூறும். இப்பொருள் பாரதத்துள்ள துரோண பருவத்தில் "பிரமாவினுடைய சிருட்டிகர்த்திருத்துவமும், விட்டுணு தானவர்களைத் தண்டித்தலும், இந்திரனுடைய சுவர்க்காதிபத்தியமும் சிவபூசையின் பலன்" என்று வருகின்றது.

"தேவர்கள் செல்வத்தை அடையுமாறு உமது விசித்திரரூபமாய மகாலிங்கமூர்த்தியை அபிஷேகாதி பூசை செய்தார்" என இருக்குவேதம் இவ்வுண்மையை நன்கு விளக்குகின்றது. ஆளுடைய பிள்ளையாரும்.

"பூத்தேர்ந்தாயன கொண்டு நின்பொன்னடி
யேத்தாதாரில்லை யெண்ணுங்கால்"

என்று திருவாய் மலர்ந்தருளினர்.

இத்துணைப் பெருமைவாய்ந்த சிவபூசை செய்யும் முறைகளை அகோரசிவாசாரியர் பத்ததியின் சாரமாகப் பலர்க்கும் உபயோகமாகும் பொருட்டுத் தமிழில் சிவபூசாவிதி என்னும் பெயருடன் எழுதி உதவியவர் இன்னரெனத் தெரியவில்லை. சிதம்பரம் ஸ்ரீ உலகமூர்த்திதேசிகர் மடத்தில் பழைய கையெழுத்துப் பிரதியொன்று கிடைத்தது. அதனையும் வேறுபழைய பிரதிகளையும் கொண்டு இவ்விதி சிற்சில திருத்தங்களுடன் அச்சிடப்பட்டுளது. பிரதியுதவிய ஷை மடத்துத் தலைவராகிய **வித்துவான் ந. சிவப்பிரகாசகுருக்களுக்கு** நன்றியை என்றும் பாராட்டி வருகின்றேன். இதன் முதற் பதிப்பாளர் திருமயிலை **சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளை** அவர்களாவர். அவர்கள் செய்துவரும் சைவத்தொண்டு எவராலும் விரும்பத்தக்கது.

பஞ்சசுத்தி செய்துநின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சியஞானம் விளங்கும் பராபரமே.

இங்ஙனம்,

**ச. குமாரசுவாமிக் குருக்கள்,**

அச்சுவேலி.

உ

கணபதி துணை.

# சிவ பூசா விதி.

## (க) சூரியபூசை.

அஸ்திர பஞ்சர மத்யஸ்தனுய், பிருதுவியாதி முப்பத்தொரு தத்துவங்களையும் மனசாலே கடந்ததாகப் பாவித்து, சுத்த வித்தியா மயமான பூஜாஸ்தானத்தை அடைந்து, பூசோபகரணங்களைச் சேகரித்து, கிழக்கு முகமாகவிருந்து சூரியபூசை பண்ணுக.

### க. சகளீகரணம்.

'ஓம் ர: அஸ்திராயபட்' என்று வலக்கையினுல் இடக்கையையும் இடக்கையினுல் வலக்கையையும் உள்ளும் புறமும் துடைத்து, ஓம் ஹ்ரும் ஹ்றீம் ஸ: சிவசூர்யாய வௌஷட்' என்று சேர்த்து, அங்குஷ்டங்களில் தர்ச்சனிகளால் ஓம் அம் இருதயாயநம:' என்றும், கனிட்டிகை அநாமிகை மத்திமைகளில் அங்குட்டங்களால் 'ஓம் அம் அர்க்காய சிரசேநம:' 'ஓம் அம் பூர்ப்புவ:ஸ்வரோம் சுவாலினீ சிகாயைநம:', 'ஓம் அம் ஹ்றூம் கவசாயநம:' என்றும் நியசித்து, உள்ளங்கைகளில் மத்திமை தர்ச்சனிகளால், 'ஓம் பம் பானு நேத்திராப்யாம்நம:' என்றும், தர்ச்சனிகளில் அங்குஷ்டங்களால் 'ஓம் ர: அஸ்திராயபட்' என்றும் நியசித்து, 'கவசாயநம:' என்று அவகுண்டனஞ் செய்து, 'ஓம் சிவசூர்யாய வௌஷட்' என்று கைகளைக் கூட்டிக் குவித்து நியசிக்க.

வலக்கை அநாமிகை அங்குட்டங்களினால் இருதயத்தில் இருதயமந்திரத்தையும், சிரசிற் சிரோமந்திரத்தையும், சிகையிற் சிகாமந்திரத்தையும், தர்ச்சனிகளாற் கண்டத்தைச் சுற்றித் தனமத்தியாந்தமாகக் கவச மந்திரத்தையும் நியசிக்க. மத்திமை தர்ச்சனிகளினால், நேத்திரங்களில் நேத்திர மந்திரத்தை நியசிக்க. அஸ்த தலங்களில் அநாமிகைகளினால் அஸ்திரத்தை நியசிக்க. அஸ்திரத்தால் தாளத்திரயமும், சோடிகா முத்திரையினால் பத்துத்திக்குகளிலும் அஸ்திரமந்திர முச்சரித்து, திக்கு பந்தனமும், கவசத்தால் அவகுண்டனமுஞ்செய்து, சரீரம் முழுவதிலும் சூர்யமூலத்தினால் மகாமுத்திரை தரிசிப்பித்துத் தன்னைச் சூரியனாய்ப் பாவித்துக்கொள்க.

## உ. தரிசனார்க்கியம்.

தாமிர பாத்திரத்தில் செந்நிறப் புஷ்பமுதலிய திரவியங்களுடன், ஜலத்தை நிறைத்து, எழுந்து பூமியில் முழந்தாள்களை ஊன்றிக்கொண்டு, இரண்டு கைகளாலும் எடுத்து, சிரசளவும் கொண்டுபோய் 'ஓம் ஹ்ராம் ஹ்றீம் ஸ: சிவசூர்யாயநம:' என்று தர்சனார்க்கியங் கொடுத்து, சூரியமூலத்தை இயன்றவரை ஜபிக்க.

## ங. அர்க்கியம்.

'ஓம் அர்க்காஸ்திராயபட்' என்று அர்க்கிய பாத்திரத்தைச் சலத்தால் அலம்பிச் சலநிறைந்த அபிஷேக கலசத்தை இரண்டு கைகளினாலும் புருவ நடுவரையும் உயர்த்திக் கொண்டுபோய், அங்கேயுள்ள செந்நிறமுடைய அமிர்தத்தை எடுத்ததாகப் பாவித்து, அதை இறக்கிக் கொண்டு வந்து, 'ஓம் கம் கஷோல்காய சூர்யமூர்த்தயே நம:' என்று அர்க்கிய பாத்திரத்திலே பூரித்து, அதிலே செந்நிறப்புஷ்பம் அட்சதை முதலியவற்றை இட்டு,

ஓம் சிவ சூர்யாசனாய நம:
,, சிவ சூர்யமூர்த்தயே நம:
,, சிவ சூர்யாய நம:
,, அம் இருதயாய நம:
,, அம் அர்க்காய சிரசே நம:
,, பூர்ப்புவ சுவரோம் சுவாலினீ சிகாயை நம:
,, ஹ்றாம் கவசாய நம:
,, பம் பாநு நேத்திராப்யாம் நம:
,, ர: அஸ்திராய நம:

என்று பூசித்து, அந்த மந்திரங்களாலேயே அபிமந்திரித்து 'ஓம் அர்க்காஸ்திராய பட்' என்று ரட்சையும், 'ஓம் கவசாய நம:' என்று அவகுண்டனமுஞ்செய்து, 'ஓம் சிவசூர்யாய வௌஷட்' என்று தேநுமுத்திரையுங் கொடுக்க. அந்த அர்க்கிய சலத்தினாலே தன்னையும், திரவியங்களையும், பூசைத் தானத்தையும், 'ஓம் அர்க்காஸ்திராய பட்' என்று புரோட்சித்து, விக்கினங்களைப்போக்கி, வேதிகையிலிடப்பட்ட அஷ்டதள பத்மத்தாதல், தாமிராதிலோகங்களினாற் செய்யப்பட்ட பத்மத்தாதல் சூரியனைப் பூசிக்க.

## ௬. துவாரபூசை.

மேற்குத்துவாரத்தின் தென்பாகத்தில் 'ஓம் தண்டினே நம:' என்றும், வடபாகத்தில் 'ஓம் பிங்கலாயநம:' என்றும், ஈசானத்தில் 'ஓம் கணபதயேநம:' என்றும், அக்கினிமூலையில் 'ஓம் குருப்யோநம:' என்றும் பூசிக்க.

பத்மத்தின் நடுவில் 'ஓம் அம் பிரபூதாசனாயநம:' என்று சுவேத பீடத்தை அர்ச்சிக்க; அக்கினி முதலிய நான்கு கோணங்களிலும்,

ஓம் அா விமலாய நம:
,, சாராய நம:

ஓம் அம் ஆராத்தியாய நம:
ஓம் அம் பரமசுகாய நம:

என்னும் நாலு சிங்கங்களையும் பூசிக்க. அவற்றிற்கு மேல் 'ஓம் அம் பத்மாயநம:' என்று கர்ணிகையோடு கூடியதாகப் பூசிக்க. பத்மத்தின் அட்டதளங்களில் கிழக்கு ஆதியாக,

ஓம் ராம் தீப்தாயை நம:
,, ரீம் சூட்சுமாயை நம:
,, ரூம் ருசாயை நம:
,, ரூம் பத்திராயை நம:
,, ரேம் விபூத்யை நம:
,, ரைம் விமலாயை நம:
,, ரோம் அமோகாயை நம:
,, ரௌம் வித்யுதாயை நம:

என்றும் கர்ணிகையின் ஈசானத்தில், "ஓம் ர: சர்வதோமுக்யைநம:' என்றும் அர்ச்சித்து, *விற்புரமுத்திரை கொடுக்க. கர்ணிகையின் நடுவில் 'ஓம் அம் அர்க்காசனாயநம:' என்று பத்மத்தின்நடுவே பூசித்து, புஷ்பங்களால் அஞ்சலிநிறைத்து, சூரியமூர்த்தியைத் தியானித்து, 'ஓம் கஷோல்காய சூர்யமூர்த்தயேநம' என்று ஆசனத்தின்மேல் மூர்த்தியைநியசித்து, 'ஓம் பம்பாநுநேத்திராப்யாம் நம:' என்றுநேத்திரம்கொடுத்து, புஷ்பங்களால் அஞ்சலியைநிறைத்து, லலாடத்தில் விளங்குகின்ற அருணவிந்து அஞ்சலிக்குள் வந்ததாகத் தியானித்து, ஓம் ஹ்ரும் ஹ்ரீம் ஸ: சிவசூர்யாயநம:' என்று சூர்யமூர்த்தி வியாபகமாக ஆவாகனமுத்திரையினால் மூர்த்தியின் இருதயத்திலே சூரியமூலத்தால்ஆவாகனம்பண்ணி, ஸ்தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம் செய்து, விம்பமுத்திரைகொடுத்து, இருதயாதி மந்திரங்களை இருதயாதி அங்கங்களில்நியசிக்க: மூலத்தால்ஏகத்துவம்செய்து, இரட்சை அவகுண்டனம் பண்ணி, மூலத்தால் தேநுமுத்திரை மகா

* கருநிலைப் பெருவிரல் கனிட்டையே முதல் விரனுதி தொடுவது விற்புர முத்திரை.

முத்திரை கொடுக்க. நம, சுவதா, சுவாகா என்பவற்றை இறுதியாயுள்ள மூலத்தால் பாத்தியாசமனார்க்கியங்களைக் கொடுக்க. வௌஷடந்த மூலத்தால் புஷ்பம் அறுகு அட்சதை சாத்துக.

'ஓம் கஷோல்காய ஸ்வாஹா' என்று தூப தீபங் கொடுத்துக் கைகழுவி, 'ஓம்கஷோல்காயஸ்வதா' என்று ஆசமனம் மூன்றுதரமும், 'ஓம் கஷோல்காயஸ்வாஹா' என்று அர்க்கியம்ஒருதரமுங்கொடுக்க. அவ்வவ் அங்கங்களில் லயாங்க பூசையைச் செய்க. போகாங்கபூசைசெய்வதற்குப் பிரார்த்தனைபண்ணி, அக்கினி ஈசானம் நிருதி வாயு என்னுந் தளங்களில் இருதயாதி அங்கங்களைப் பூசிக்க. முன்தளத்தில் நேத்திரத்தையும், நான்குதளங்களிலும் கிழக்குமுதல் அத்திரத்தையும் பூசிக்க. கிழக்குமுதலிய தளங்களில் 'ஓம் சம் சோமாய நம:', 'ஓம் பும் புதாயநம:', 'ஓம் ப்றும் பிரகஸ்பதயே நம:', 'ஓம் பம் பார்க்கவாய நம:' என்றும், அக்கினி முதலியதளங்களில் 'ஓம் அம் அங்காரகாய நம:', 'ஓம் சம் சனைச்சராய நம:' 'ஓம் ரம் ராஹவே நம.' 'ஓம் கம் கேதவே நம:' என்றும் பூசித்து, நமஸ்காரமுத்திரை கொடுக்க.

சூரியனுக்கு வலப்பாகத்தில் 'ஓம் உஷாதேவ்யை நம:' என்றும், இடப்பாகத்தில் 'ஓம் பிரத்துஷா தேவ்யை நம:' என்றும் பூசிக்க.

'ஓம் அர்க்காஸ்திராயபட்' என்று நைவேத்தியத்தை அர்க்கிய ஜலத்தினலே புரோட்சித்து, 'ஓம் கஷோல்காய ஸ்வாஹா' என்று புஷ்பத்தோடு கூடிய மிருக முத்திரையினலே நிவேதித்து, அம்மந்திரத்தினலேயே பானீயங் கொடுத்து, ஆசமனம் அர்க்கியம் தூபதீபம் முன்போலக் கொடுக்க.

'ஓம் ஹ்ரும் ஹ்றீம் ஸ: சிவசூரியாய நம:' என்று பத்துத்தரம் செபித்து, அதற்குத் திக்பந்தனமும் அவகுண்டனமுஞ் செய்து, அதை வலக்கையில் ஏற்றுக்கொண்டு, அர்க்கியம் ஜலஞ் கூட்டி, 'ஓம் சிவசூரியாய ஸ்வாஹா' என்று உற்

பவ முத்திரையினாலே ஜபத்தைச் சூரியனுடைய வலக்கை யிலே நிவேதித்துக் கும்பிட்டுக் கொள்க.

பராங்முகார்க்கியங் கொடுத்து, 'அஸ்திராய ஹூம் பட்' என்று நாராச முத்திரையினால் அங்காதி மந்திரங்களை எழுப்பி, சூரியனிடத்தில் யோசித்து, சுவாகதார்க்கியங் கொடுத்து, இருதய கமலமத்தியில் இருக்கும் சூரியனிடத் தில் யோசித்துக்கொள்க.

---

### ரு. சண்டபூசை.

ஈசானதிக்கில் தேஜஸ் சண்டரை ஆசனாதிகளால் பூசித்து, சூரியநின்மாலியங்களைச் சமர்ப்பித்து விசர்ச்சனம் செய்க.

பின்பு ஆசமித்து விபூதி தாரணம் செய்க. சிவபூசை செய்ததன்மேல், இச்சண்டேசுர பூசைசெய்து விசர்ச்சனம் செய்தலுமாம்.

---

## (உ) சிவபூசை.

### க. சகளீகரணம்.

பின்பு, வடக்குமுகமாயிருந்து கராங்கநியாசத்தைச் செய்க. 'ஓம்ஹ: அஸ்திராயபட்' என்று வலக்கையால் இடக் கையையும், இடக்கையால் வலக்கையையும், உள்ளும் புற மும் சோதித்து, 'ஓம் ஹௌம் சக்தயே வௌஷட்' என்று இரு கரங்களையுஞ் சேர்த்து, உள்ளங்கைகளிலே பெருவிரல்களி னுமேல 'ஓம் ஹாம் சிவாசனாய நம:' 'ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவ மூர்த்தயே நம:' என்று நியாசம்பண்ணி, 'ஓம் ஹொம் ஈசான மூர்த்தாய நம:' என்று பெருவிரல்களிலே சுட்டுவிரல்களி னாலும்; தர்ச்சனி முதல் கனிட்டை விரல் அந்தமாகப் பெரு விரல்களினாலே, 'ஓம் ஹே தத்புருஷ வக்திராய நம:' 'ஓம் ஹூம் அகோரஹ்ருதயாய நம:', 'ஓம் ஹிம் வாமதேவ குஹ் யாய நம:' 'ஓம் ஹம் சத்யோஜாதமூர்த்தயே நம.' என்று நிய

சித்து. உள்ளங்கைகளிலே பெருவிரல்களினாலே, 'ஓம் ஹாம் ஹௌம் வித்தியாதேகாய நம:' என்று நியசித்து, பின்பு நடுவிரல்மூன்றினாலே 'ஓம் ஹௌம் நேத்திரேப்பியோநம:' என்று நியசித்து, கைகளின் நடுவிரல் பெருவிரல்களினாலே மூலமந்திரத்தை ஆவாகனம் பண்ணி, கனிட்டை முதலான விரல்களிலே 'ஓம் ஹாம் இருதயாயநம:', 'ஓம் ஹீம் சிரசேநம:' 'ஓம் ஹூம் சிகாயை நம:', 'ஓம் ஹைம் கவசாய நம:' 'ஓம் ஹ: அஸ்திராய நம:' என்று நியசித்து, கவசத்தால் அவகுண்டனம் பண்ணி, இரண்டு கைகளையும் கூட்டி, வௌஷடந்த மூலத்தால் பரமீகரணம் பண்ணுக.

மார்பிலே ஆசனமூர்த்தி மந்திரங்களை வலக்கைப் பெருவிரலோடு கூடிய மோதிர விரல்களால் நியசித்து, ஈசான மந்திரத்தைப் பொத்திய வலக்கைப் பெருவிரலால் உச்சியிலே நியசித்து, முகம் மார்பு கொப்பூழ் முழந்தாள் என்னுந் தானங்களிலே தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்னும் மந்திரங்களைப் பெருவிரலோடு கூடின சுட்டுவிரல் முதலாக முறையானே பதித்து, இருதயத்தில் வித்தியாதேக மந்திரத்தைப் பெருவிரல் மோதிர விரல்களினாலும், நேத்திர மந்திரத்தைக் கண்களிலே நடுவிரல் மூன்றினாலும் நியசித்து, மூலமந்திரத்தை இருதயத்தில் ஆவாகனஞ்செய்து, இருதயம் சிரசு சிகை என்னுந் தானங்களிலே இருதயம் சிரசு சிகை என்னும் மந்திரங்களைப் பெருவிரலோடுகூடிய சிறுவிரல் அணிவிரல் நடுவிரல்களினால் நியசித்து, கவச மந்திரத்தினால் தர்ச்சனிகளினாலே தனமத்தியாந்தமாகக் கழுத்தைச்சுற்றி, பெருவிரலோடு கூடிய அணிவிரல்களினால் உள்ளங்கைகளில் அஸ்திரமந்திரத்தை நியசித்து, அஸ்திர மந்திரத்தால் தாளத்திரயத்தையும், திக்குபந்தனத்தையும் செய்து கவசத்தால் அவகுண்டனம் பண்ணி வௌஷடந்த மூலத்தால் மகாமுத்திரை காண்பிக்க.

---

## உ. சாமானியார்க்கியம்.

'ஓம் ஹ: அஸ்திராய நம:' என்று சாமானியார்க்கிய பாத்திரத்தைச் சலத்தினால் அலம்பி, சல நிறைந்த அபிஷேக கலசத்தை இரண்டு கைகளினாலும் புருவ நடுவரையும் உயர்த்திக்கொண்டுபோய், அந்தச் சலத்தை அந்தப் புருவ நடுவினின்றும் எடுக்கப்பட்ட அமிர்தமாகப் பாவித்து, அதை இறக்கிக்கொண்டுவந்து, 'ஓம் ஹாம் இருதயாய வௌஷட்' என்று அந்த அருக்கியபாத்திரத்திலேபூரித்து, அதிலே சந்தனமும் புஷ்பமும் அறுகும் அக்ஷதையுமிட்டு, 'ஓம் நம:' என்று பிரணவமந்திரத்தினாலே ஏழுதரம்பூசித்து அதனால் ஏழுதரம் அபிமந்திரித்து, 'ஓம் ஹ: அஸ்திராய பட்' என்று இரட்சையும், 'ஓம் ஹைம் கவசாய வௌஷட்' என்று அவகுண்டனமும் செய்து, 'ஓம் ஹாம் சிவாய வௌஷட்' என்று தேனுமுத்திரை கொடுத்து, 'ஓம் ஹ: அஸ்திராய பட்' என்று மேற்குத்துவாரத்தைப் புரோக்ஷிக்க.

---

## ங. துவாரபூசை

மேற்குத் துவாரத்தின் மேற்படியிலே
'ஓம் ஹாம் கணபதயேநம:' என்று தென்பக்கத்திலும், [லும்
'ஓம் ஹாம் ஸரஸ்வத்யைநம:' என்று அதற்குவடபக்கத்தி
'ஓம் ஹாம் மஹாலட்சுமியைநம:' என்று கணபதிக்கும் சர
[ஸ்வதிக்கும் நடுவிலும்,
'ஓம் ஹாம் நந்திநேநம:' என்று கணபதிக்குத் தெற்கிலும்,
'ஓம் ஹாம் கங்காயைநம:' என்று கணபதிக்கும் நந்திக்கும்
[நடுவிலும்,
'ஓம் ஹாம் மகாகாளாயநம:' என்றுசரஸ்வதிக்குவடக்கிலும்,
'ஓம் ஹாம் யமுனையைநம:' என்று சரஸ்வதிக்கும் மகாகாளருக்கும் நடுவிலும்பூசித்து, ஷைமந்திரங்களால் சுவாகதார்க்கியம் கொடுத்துக் கும்பிட்டுத் தாங்கள் பூசாஸ்தானத்தைக் காத்துக்கொண் டிருத்தல் வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொள்க.

---

## ச. விக்கிநோச்சாடனம்.

'ஓம் ஹாம் ஹௌம் சிவாயநம:' என்று பெருவிரலோடு கூடிய அணிவிரலினாலே வலக்கண்ணையும் இடக்கண்ணையும் நியசித்து, அப்படியே நியசிக்கப்பட்ட திவ்விய நேத்திரங்களினாலே மேலேபார்த்துச் சுவர்க்கத்திலுள்ள இடையூறுகளையும், 'ஓம் ஹ: அஸ்திராயபட்' என்று இரண்டு கைகளையும் மாற்றி *நாராசமுத்திரையினாலே புஷ்பத்தைத் தெறித்து மத்தியிலுள்ள இடையூறுகளையும், ஓம் சிலீம் பசூம் ஹூம்பட் பாசுபதாஸ்திராய நம:' என்று வலக்காற் புறவடியினாலே மூன்றுதரம் தட்டி அந்தப் பூமியிலுள்ள இடையூறுகளையும் நீக்குக.

---

## ரு. சிவதாமப்பிரவேசாதி.

திருக்கோயிலுள்ளே வாமபாகத்தால் வலக்கால் முன்னாகப்புகுந்து, 'ஓம் ஹ: அஸ்திரதுவாரபாலாயநம:' என்று உள்ளே கீழ் வாயிற்படியிலே பூசித்து, சுவாகாந்தமாக அருக்கியங்கொடுக்க. பிரதக்ஷிணக் கிரமமாகப் போய், 'ஓம் ஹாம் வாஸ்துவதிபதயே பிரஹ்மணேநம:' என்று தென் மேற்கிலே பூசித்து: சுவாகாந்தமாக அருக்கியங் கொடுக்க.

---

## சா. பூசோபகரணங்களை அமைத்தல்

திருமஞ்சன பாத்திரத்தை நிரீட்சணாதி சுத்திசெய்து வடிகட்டும் வஸ்திரத்தை அஸ்திரத்தாற் சுத்திசெய்து பாத்திரத்தைமூடி. இருதயத்தால் வடித்தெடுத்தநீரையும் புஷ்பமுதலிய பூசோப கரணங்களையும் பக்கத்திலே வைத்துக்கொள்க.

---

* இருகை முட்டியி னிமிர்த்திட்ட தர்ச்சனிகளிற் செருகிய பெருவிரல் தெறிக்கினா ராசம்,

## ஏ. பூதசுத்தி

'ஓம் ஹ: அஸ்திராயபட்' என்று திக்கு பந்தனமும், 'ஓம் ஹௌம் கவசாய வௌஷட்' என்று அவகுண்டனமுஞ் செய்து பூசாஸ்தானத்தைக் காவல்செய்து, கரகியாசம் செய்துகொண்டு சுழுமுனைத்தியானஞ்செய்க.

---

## அ. சுழுமுனைத்தியானம்.

காற்பெருவிரல்கள் இரண்டிலுந் தொடங்கி, மூலாதாரம்வரையும் இரண்டுருவமுடையதாகி, அந்த மூலாதாரத்தினின்றும் உச்சியினிடத்ததாகிய பிரமரந்திரம் வரையும் ஒரேயுருவமுடையதாகி உட்டுளையுடையதாயிருக்கும் சுழுமுனை நாடி மின்கொடிபோலப் பிரகாசிப்பதாகவும், இடப்பக்க நாடியாகிய இடையும், வலப்பக்க நாடியாகிய பிங்கலையும் இருதயம் கண்டம் தாலு புருவநடு பிரமரந்திம் என்னும் ஐந்திடங்களிலும் அந்தச் சுழுமுனை நாடியோடு பின்னினவைகளாகவும், அவ்வைந்திடங்களிலும் கீழ்நோக்கிய ஐந்து தாமரையரும்புகள் உள்ளவைகளாகவுந் தியானித்து, அந்தச் சுழுமுனை நாடியின் உள்ளும் புறமும் அமுததாரையைப் பொழிகின்ற குண்டலினி சத்தியைப் பாவனைபண்ணி, அந்தச் சத்தியின்நடுவே, சிகாமந்திரத்தின் பீஜமாகிய ஹூம் என்பது தீபம்போலப் பிரகாசிப்பதாகச் சிந்தித்து, வாயுவை இடமூக்கினாலே உள்ளே வாங்கி நிறுத்தி, அந்த ஹூங்கார மந்திரத்தாலே மனசை நிறுத்தி, முன்னிறுத்திய வாயுவை மேலே துவாதசாந்தம்வரையும் ஏற்றி, 'ஹூம் பட்' என்று இடைவிடாது ஐந்துதரம் அடுக்கி உச்சரித்துச் * சோடிகை முத்திரையினாலே கீழ்நோக்கிய தாமரையரும்புகள் ஐந்தும் மேனோக்கி அலரும்படிசெய்து, அவ்வாயுவைத் திருப்பி வலமூக்கினாலே புறஞ்செல்ல விடுக.

---

* பிடித்தகைத் தர்ச்சனி பெருவிர லின்னடுத்
துடித்திடத் தெறிப்பது சோடிகா முத்திரை.

## கூ. ஆத்மயோசனே.

திரும்ப வாயுவை இடமூக்கினுலே உள்ளே வாங்கி நிறுத்தி இருதயகமலத்தில் நக்ஷத்திரம்போலப் பிரகாசிக்கின்ற ஹம் என்னும் ஆத்தும பீஜத்தாலாகிய உருவத்தையுடைய அறிவு மயமாகிய ஆன்மாவைத் தியானித்து, முன்னிறுத்தியவாயுவை மேலேயேற்றி, அவ்வான்மாவைச் *சங்கார முத்திரையினுலே இருதயத்தினின்றும்எடுத்து இதயகமலத்தில் பிரமத்தியாகமும்: கண்ட கமலத்தில் விஷ்ணுத்தியாகமும், தாலு கமலத்தில் மகேசுரத்தியாகமும், பிரமரந்திரத்தில் சதாசிவத்தியாகமும் செய்து இப்படிக் காரணேசுர தியாகக்கிரமத்தால் பிராணவாயுவை மேலேற்றுதலோடு 'ஓம் ஹாம் ஆத்மநே நம:' என்று ஆத்ம மந்திரங்கொண்டு துவாத சாந்தத்திலிருக்கும் சிவனிடத்தில் யோசிக்க.

---

## கO. சூக்குமதேக சுத்தி.

சத்தமும் பரிசமும் பிரமாவினிடத்திலும், ரசம் விஷ்ணுவினிடத்திலும், ரூபமும் கந்தமும் உருத்திரனிடத்திலும், புத்தியும் அகங்காரமும் மகேசுரனிடத்திலும், மனமும் விந்துவும் சதாசிவனிடத்திலும் ஒடுங்கினதாகப் பாவிக்க.

---

## கக. தூலதேக சுத்தி.

தன் சரீரத்தைப் பொன்னிறமுடைய பிருதிவி மயமாகப் பாவித்து, வாயுவை இடமூக்கினுலே உள்ளே வாங்கி நிறுத்தி, 'ஓம் ஹ்லாம் ஹ்லாம் ஹ்லாம் ஹ்லாம் ஹ்லாம் நிவிர்த்தி கலாயை 'ஹ: ஹூம்பட்' என்று துவாதசாந்தம் வரையும் ஐந்துதரம் மேலேற்றி வலமூக்கினுலே கழித்துக் கந்தரச ரூப பரிச சத்தம் என்னும் பிருதுவிக்குணம் ஐந்தையும் போக்கி, அப் பிருதிவி வாயு மயமானதாகப் பாவிக்க.

---

* அங்குலி நான்கு மங்குட்டத்தடி.
தங்குற வளைப்பது சங்கார முத்திரை.

பின்பு, சரீரத்தை வெண்ணிறமுடைய அப்புமயமாகப் பாவித்து, 'ஓம் ஹ்ரீம் ஹ்ரீம் ஹ்ரீம் ஹ்ரீம் பிரதிஷ்டா கலாயை ஹ: ஹூம்பட்' என்று முன்போல நான்கு தரம் மேலேற்றலினாலே ரச ரூப பரிச சத்தம் என்னும் அப்புக் குண நான்கையும் போக்கி, அவ்வப்பு அக்கினி மயமானதாகப் பாவிக்க.

பின்பு, சரீரத்தைச் செந்நிறமுடைய தேயுமயமாகப் பாவித்து, 'ஓம் ஹ்றூம் ஹ்றூம் ஹ்றூம் வித்தியாகலாயை ஹ: ஹூம்பட்' என்று முன்போல மூன்றுதரம் மேலேற்றலினாலே ரூப பரிச சத்தமென்னும் தேயுகுண மூன்றையும் போக்கி, அத்தேயு சலமயமானதாகப் பாவிக்க.

பின்பு, சரீரத்தைக் கருநிறமுடைய வாயு மயமாய்ப் பாவித்து, 'ஓம் ஹ்றைம் ஹ்றைம் சாந்தி கலாயை ஹ: ஹூம்பட்' என்று முன்போல இரண்டுதரம் மேலேற்றலினாலே பரிச சத்தமென்னும் வாயு குணம் இரண்டையும் போக்கி, அவ்வாயுவைப் பிருதிவி மயமானதாகப் பாவிக்க.

பின்பு, சரீரத்தைத் தெளிந்த பளிங்கு நிறமுடைய ஆகாச மயமாகப் பாவித்து, 'ஓம் ஹௌம் சாந்தியதீத கலாயை ஹ: ஹூம்பட்' என்று முன்போல ஒரு தரம் மேலேற்றலினாலே சத்தமென்னும் ஆகாச குணத்தைப் போக்கி, அவ்வாகாசத்தைப் பரமாகாசமாகிய விந்துமயமானதாகப் பாவிக்க.

---

## கஉ சரீரதகனம்.

பின்பு, 'ஹ: அஸ்திராய ஹூம்பட்' என்று வலக்காற் பெருவிரலினின்றும் கலாக்கினியை எழுப்பி, அது பிராரத்த சரீரத்தைச் சார்ந்த குற்றங்கள் எல்லாவற்றையும் எரித்ததாகப் பாவிக்க.

---

### கங. அமிர்தாப் பிலாவனம்

பின்பு, 'ஓம் ஹாம் சிவாய வௌஷட்' என்று உச்சரித்து, துவாதசாந்தத்திலிருக்கிற பாவிந்துவினின்றுந் தோன்றிய அமுததாரைகளினாலே சரீரத்தின் உள்ளும் புறமும் நனைந்ததாகப் பாவிக்க.

---

### கச. ஆத்துமஸ்தாபனம்.

இருதயத்திலே நாளம் பத்திரம் கர்ணிகைஎன்பனவைகளோடு கூடிய தாமரைப்பூவை அகாரமுதலான மூன்று மாத்திரைகளோடு கூடின பிரணவத்தால் உண்டாகிய சுத்த வித்யாமயமான பீடமாக கியசித்து அதனது கர்ணிகையிலே அறிவு தொழில் வடிவாகிய சூக்கும சரீரத்தை நாற்கலைப் பிரணவத்தினால் வந்ததாகப் பாவித்து, அந்தச் சூக்குமசரீரத்திலே துவாதசாந்தத்தினின்றும் சிவமயமாகிய ஆன்மாவைப் பஞ்சகலைப் பிரணவத்தோடு கூட 'ஓம் ஹம் ஆத்மநே நம:' என்று பூரகத்தினால் சிருட்டிக்கிரமமாக எடுத்துக்கொண்டு வந்து, ஒளிவடிவினனாகத் தாபித்து, 'ஓம் சக்தயே வௌஷட்' என்று உச்சரித்து, அதனாற் கலக்குண்ட சத்தியினின்றும் பெருகும் அமுத வெள்ளத்திலே அபிஷேகம் பண்ணுக. இதுவரையும் பூதசுத்தி.

---

### கரு. அந்தரியாகம்.

அதற்குப்பின் முன்போல அங்கந்யாசம் செய்து, இருதயம் நாபி புருவநடு என்னுந் தானங்களைப் பூஜை ஹோமம் சமாதி என்பவைகளுக்கு இடங்களாகச் சங்கற்பிக்க. நாபியிலுள்ள கிழங்கினின்றுந்தோன்றி, எட்டங்குல நாளத்தையும் நாலங்குலப் பிரமாணமான புஷ்பத்தை உடையதுமான இருதய கமல சிவாசனத்தைச் சிந்திக்க. இங்ஙனமாகக் கற்பிக்கப்பட்ட பிருதிவியாதி நாதாந்த வடிவாயுள்ள ஆசனத்தின்மீது சோதிமயமாகிய இலிங்கத்தைப் பாவித்து, சமஸ்த உபசாரங்களினாலும் சித்தத்தால்பூசித்து, நாபி

குண்டத்தில் தானே உற்பவித்ததாய அக்கினியில் ஞானாக்கினியை நியசித்து, சிவனைப் பூசித்து, பூரகத்தால் இழுக்கப்பட்டதாய், பிந்துஸ்தானத்தினின்றும் பெருகாநின்ற அமிர்தவடிவான நெய்யை இடைபிங்கலையாகிய சிருக்கு சிருவங்களால் அள்ளி மூலத்தால் ஆகுதியையுஞ் செய்து, உள்ளே பூஜிக்கப்பட்ட பகவானிடத்தில் ஒப்பித்து, பிந்து ஸ்தானத்தில் சர்வ விஷய ஞான கிரியா சக்தி யுக்தமாயும், விளங்காநின்ற தாரகையினது வடிவுடையதாயுமுள்ள நிஷ்கள சிவத்தைச் சிந்தித்துப் புறபூசை செய்கிறேனென்று பிரார்த்தித்து அனுஞ்ஞை பெற்றுக்கொள்க.

---

## கசூ. தானசுத்தி.

'ஓம் ஹ: அஸ்திராய ஹூம்பட்' என்று தாளத்திரயஞ் செய்து, இடையூறுகளைப் போக்கி, 'ஓம் ஹ: அஸ்திராய பட்' என்று சோடிகாமுத்திரை கொண்டு பத்துத்திக்கிலும் திக்குபந்தனம் செய்தலினாலே சுவாலிக்கின்ற அக்கினி நிறமாகிய மதிலையும், 'ஓம் ஹௌம் கவசாய வௌஷட்' என்று மூன்றுதரம் சுட்டுவிரலைச் சுற்றுதலினாலே மூன்றகழையும் பாவித்துக்கொண்டு, 'ஓம் ஹாம் ஹௌம் சக்தயே நம.' என்று தேனுமுத்திரையினாலே சிவசக்தி சமூகத்தை மேற்பாகத்தும் கீழ்ப்பாகத்தும் பாவித்துக்கொள்க.

---

## கஎ. சிவார்க்கியம்.

'ஓம் ஹ: அஸ்திராயபட்' என்று விசேஷார்க்கிய பாத்திரத்தைச் சலத்தினாலலம்பி, சலம் நிறைந்த அபிஷேக கலசத்தை இரண்டு கைகளினாலும் புருவ நடுவரையும் உயர்த்திக்கொண்டுபோய், அந்தக் கலசத்தைப் புருவ நடுவினின்றும் எடுக்கப்பட்ட அமிர்தமாகப் பாவித்து, அதை இறக்கிக் கொண்டுவந்து, 'ஓம் ஹாம் இருதயாயவௌஷட்' என்று அவ்வர்க்கிய பாத்திரத்திலே பூரித்து, சந்தனம்,

புஷ்பம், அறுகு, அட்சதை * முதலியவைகளை இட்டு, சிவாசனம் சிவமூர்த்தி பஞ்சப்பிரமம் வித்தியாதேகம் நேத்திரம் மூலம் நேத்திரமொழிந்த அங்கபஞ்சகம்பின்பும் மூலம் என்னும் பதினாறு மந்திரத்தினாலும் பூசித்து, பஞ்சப்பிரமஷடங்க மந்திரங்களால் அபிமந்திரித்து, "ஓம் ஹ: அஸ்திராயபட்' என்று இரட்சையும், 'ஓம் ஹைம் கவசாய வௌஷட்' என்று அவகுண்டனமுஞ்செய்து, 'ஓம் ஹாம் சிவாய வௌஷட்' என்று தேனுமுத்திரை கொடுத்து, 'ஓம் ஹ: அஸ்திராயபட்' என்று அவ்வர்க்கிய சலத்தினாலே தனது தலையைப் புரோட்சித்துக்கொள்க.

---

## கஅ. திரவியசுத்தி.

'ஓம் ஹ: அஸ்திராயபட்' என்று புஷ்ப முதலிய பூசாத்திரவியங்களைச் சிவார்க்கிய சலத்தினாலே புரோட்சித்து, 'ஓம் ஹைம் கவசாய வௌஷட்' என்று அப்பியுட்சணஞ்செய்து, 'ஓம் ஹாம் இருதயாயநம:' என்று அபிமந்திரித்து, 'ஓம் ஹைம் கவசாய வௌஷட்' என்று அவகுண்டனஞ்செய்து, 'ஓம் ஹாம் சிவாய வௌஷட்' என்று தேனுமுத்திரையினால் அமிர்தமயமாகச்செய்து, ஒருபுஷ்பத்தை சிவார்க்கிய சலத்தில் தோய்த்துத் திருமஞ்சன பாத்திரத்திலிட்டு † தேனுமுத்திரை கொடுத்துவிடுக.

---

## கக௯. ஆத்துமபூசை.

'ஓம் ஹாம் சிவாசனாய நம:' என்று ஒரு புஷ்பத்தைத் தனது ஆசனத்திலிட்டு, 'ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம:' என்று தனது இருதயத்திலே புஷ்பமிட்டு, 'ஓம் ஹௌம் நேத்திரேப்யோநம:' என்று நெற்றியிலே சந்தனத்திலகமிட்டு, 'ஓம் ஹாம் சிவாய நம:' என்று சிரசிலே புஷ்பம் இடுக.

---

* முதலிய என்றதனால் பால், தருப்பைநுனி, எள்ளு முதலியவைகளைக் கொள்க.

† இருகைகள் கூட்டி யிடையிடை சேர்த்திடு
விரல்களில் தர்ச்சனி விரல்மத் திமைகளை
யார்த்திடக் கனிட்டை அநாமிகை களினாற்
சேர்த்தறப் பிடிப்பது தேனுமுத் திரையே.

## உ௩. மந்திரசுத்தி.

மௌனம் பொருந்திய இருதய தானத்திலே கும்பிட்டுக்கொண்டு, பஞ்சப்பிரம சடங்க மந்திரங்களையும், சிவமூல மந்திரத்தையும் * ஹ்ரஸ்வதீர்க்க புலுதக்கிரமமாய் ஓங்காராதி நமோந்தமாக உச்சரிக்க.

---

## உ௪. இலிங்கசுத்தி.

ஸ்நான வேதிகையில் ஒரு பரிவட்டத்தை விரித்து, † சடுத்தாசனம் பூசித்து, சுவாமியைப் பெட்டகக்கோயிலினின்றுமெடுத்து, ஸ்நானவேதிகையில்வைத்து சிவகாயத்திரியால் அர்ச்சித்து, சாமானியார்க்கியத்தைச் சத்தியோஜாதாதியாக 'ஓம் ஹாம் சிவாய சுவாகா' என்றுகொடுத்து, தீப தூபம் சமர்ப்பித்து, சத்தியோஜாதாதி பஞ்சப் பிரமங்களைக் கனிட்டாதி அங்குட்டாந்தமான விரல்களில் நியசித்து, அங்குட்ட தர்ச்சனியினுல் அஸ்திர மந்திரத்தினுலே நின்மாலியம் கழித்து, ஈசான திக்கில் சுத்த பாத்திரத்தில் சண்ட பூஜார்த்தமாக இருதயத்தால் வைத்து, அங்குட்ட அநாமிகையினுல் ஒரு புஷ்பம் சாத்தி, 'ஓம் ஹ: அஸ்திராய நம:' என்று சிவலிங்கத்தையும், 'ஓம் ஹூ: பாசுபதாஸ்திராய நம:' என்று ஆவுடையாளையும் அலம்பி, சாமான்னியார்க்கியங்கொண்டு அஸ்திரத்தினுல் அபிடேகித்து அஷ்டபுஷ்பத்தாதல், ஆசனமூர்த்தி மூலத்தாதல் அர்ச்சித்து, விசேஷார்க்கியங்கொடுத்து தூப தீபம்சமர்ப்பித்து, மூலத்தால் சந்தனுதித்தைலம் சாத்தி, அரிசிமா, மஞ்சள்மா, நெல்லிமுள்ளிகளால் அபிஷேகஞ்செய்து, பஞ்சகவ்வியம் பஞ்சாமிர்தம் பால் தயிர் தேன் கருப்பஞ்சாறு பழவகை இளநீரபிடேகம் செய்து, இடை.யிடையே ஆசமனூர்க்கியங் கொடுத்து, சுத்தோகத்தால் அபிடேகஞ் செய்க. மூலத்தாலும் பஞ்சப்பிரம ஷடங்கங்களினுலும் சுவாகாந்தமாகவும்,

---

* குறில் நெடில் அளபெடை.

† சடுத்தாசனம்:— அநந்தாயந:, தர்மாயநம:, ஞானயநம:, வைராக்கியாயநம:, ஐசுவரியாயநம:, பத்மாயநம:.

வியோம வியாபி மந்திரங்களினலும் சங்காபிஷேகத்தை யும், சகஸ்ரதாராபிஷேகத்தையும் சுகந்தவர்க்கங்களையும் அபிஷேகம்பண்ணி, அட்டபுஷ்பம் தூபதீபா சமனர்க்கியம் நைவேத்தியம் பண்ணி, ஆசமனர்க்கியங் கொடுத்து, இருதயத்தால் விசேஷார்க்கியாபிஷேகம் பண்ணி, திருவொற்ருடை சாத்தி, மூலத்தால் புஷ்பம் சாத்தி, கவசத்தால் பீடத்தில் எழுந்தருளப்பண்ணுக.

இப்படியே செய்யப்பட்ட ஆத்மசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி யுடையவனய்ச் சிவனைப் பூசிக்க.

---

## உஉ. கணபதி இலக்குமி குரு பந்திபூசை.

'ஓம் ஹாம் கணபதயே நம:' என்று பீடத்தின் வடமேற்கிலும், 'ஓம் ஹாம் மஹாலட்சுமியை நம:' என்று கணபதிக்குக் கிழக்கிலும்,

ஓம் ஹாம் சதாசிவகுரவே நம:
,, அநந்தகுரவே நம:
,, ஸ்ரீகண்டகுரவே நம:
,, அம்பிகாகுரவே நம:
,, ஸ்கந்தகுரவே நம:
,, விஷ்ணுகுரவே நம:
,, பிரமகுரவே நம:

என்று வடகிழக்குத் தொடங்கி மேற்குவரையும் பூசித்து, சுவாகாந்தமாகச் சாமானியார்க்கியங் கொடுத்து, "சிவபெருமானே இயன்ற திரவியங்கொண்டு பூசை செய்வேன்" என்று பிரார்த்தித்து, அநுமதி பெற்றுக்கொள்க.

---

## உ௩. சிவாசன பூசை.

பீடத்தின் கீழ் மத்தியில், ஓம் ஹாம் ஆதாரசக்தயே நம: என்றும்,
பிரம சிலையின்மேல், ,, அநந்தாசனய நம:
,, அநந்தாய நம: என்றும்பூசித்து

'ஓம் ஹாம் தர்மாய நம:, என்று தென்கிழக்கிலும்,
,, ஞானய நம:' என்று தென்மேற்கிலும்,
,, வைராக்கியாய நம:' என்று வடமேற்கிலும்,
,, ஐசுவரியாய நம:' என்று வடகிழக்கிலும்,
,, அதர்மாய நம:' என்று கிழக்கிலும்,
,, அஞ்ஞானய நம:' என்று தெற்கிலும்,
,, அவைராக்கியாய நம:' என்று மேற்கிலும்,
,, அனைசுவரியாய நம:' என்று வடக்கிலும்,
,, அதச்சதனய நம:' என்று தென்மேற்கிலும்,
,, ஊர்த்துவச்சதனய நம:' என்று ஈசானத்திலும்பூசித்து,

நடுவே

ஓம் ஹாம் கந்தாய நம:
,, பீஜாய நம:
,, அங்குராய நம:
,, நாளாய நம:
,, கண்டகேப்யோ நம: என்றும்,

கல்வபத்திரத்தில் ஓம் ஹாம் தளேப்யோ நம: என்றும்,
தளத்தின் கீழ்ப்பீடத்தின்மேல் ஓம் ஹாம் கேசரேப்யோநம:என்றும்;
பீடத்தின்மேல் ஓம் ஹாம் கர்ணிகாயை நம:
,, பீஜேப்யோ நம:
,, பத்மாய நம: என்றும் பூசித்து,

பதுமத்தின் கேசரங்களில்

ஓம் ஹாம் வாமாயைநம: என்று கிழக்கிலும்,
,, ஜேஷ்டாயைநம: என்றுதென்கிழக்கிலும்,
,, ரௌத்திரியைநம: என்று தெற்கிலும்,
,, காள்யைநம: என்று தென்மேற்கிலும்,
,, கலவிகரண்யைநம: என்று மேற்கிலும்,
,, பலவிகரண்யைநம என்று வடமேற்கிலும்,
,, பலப்பிரமதன்யைநம: என்று வடக்கிலும்
,, சர்வபூததமன்யைநம:என்று வடகிழக்கிலும்,

கர்ணிகையின் ஈசானத்தில்

ஓம் ஹாம் மனோன்மன்யைநம: என்றும்,

தள நுனி வட்டத்திலே

ஓம் ஹாம் சூரியமண்டலாயநம: என்றும்,

அதன் நடுவே

ஓம் ஹாம் சூரியமண்டலாதிபதயேபிரம்மணேநம:என்றும்,

கேசர நுனி வட்டத்திலே

ஓம் ஹாம் சோமமண்டலாயநம: என்றும்,

அதன் நடுவிலே

ஓம் ஹாம் சோமமண்டலாதிபதயேவிஷ்ணவேநம: என்றும்,

கர்ணிகையின் அக்ரத்தில்

ஓம் ஹாம் அக்கினிமண்டலாயநம: என்றும்,

அதன் நடுவிலே,

ஓம் ஹாம் அக்கினி மண்டலாதிபதயே ருத்திராயநம: என்றும்,

கர்ணிகையின் நடுவில்,

ஓம் ஹாம் சத்திமண்டலாயநம: என்றும்,

அதன்மேலே,

ஓம் ஹாம் சத்திமண்டலாதிபதயே ஈசுவராயநம: என்றும்,

பிருதிவியாதி குடிலாந்த வியாப்திகமாகப்பாவித்து

ஓம் ஹாம் சிவாசனயநம: என்று பூசிக்க.

[இதுவரையும் சத்தியாதி சத்திபரியந்த சிவாசன பூசை,]

---

## உச. சிவமூர்த்திநிவேசனம்.

'ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயேநம:' என்று மூர்த்தியை ஒளிரூபமாகவும், தண்டாகாரமாகவும், பிரியாத அவயவங்களை யுடையதாகவும், சிவதத்துவ ரூபமாகவும் பரவிந்து வியாப்திகமாகவும், லிங்கத்தின் ஈசானம் மேற்கு வடக்கு தெற்கு கிழக்குகளில் நிவேசிக்க.

---

## உரு. தண்டபங்கி

அம்மூர்த்தியினிடத்தே சுட்டுவிரலோடு கூடிய பெருவிரலினாலே,

'ஓம் ஹோம் ஈசானமூர்த்தாயநம:' என்று சிரசிலும்,
பெருவிரலோடுகூடிய சுட்டுவிரலினாலே,
'ஓம் ஹேம் தத்புருஷவக்த்ராயநம:' என்று முகத்திலும்,
பெருவிரலோடு கூடிய நடுவிரலினாலே,
'ஓம் ஹூம் அகோரஹ்ருதயாயநம:' என்று இருதயத்திலும்,
பெருவிரலோடுகூடிய அணிவிரலினாலே,
'ஓம் ஹிம் வாமதேவகுஹ்யாயநம:' என்று கொப்பூளிலும்,
பெருவிரலோடுகூடிய சிறுவிரலினாலே,
'ஓம் ஹம் சத்யோஜாதமூர்த்தயேநம:'
என்று முழந்தாள்களிலும் நியசிக்க.

---

## உசு. முண்டபங்கி

சுட்டுவிரலோடுகூடிய பெருவிரலினாலே திருமுடிகளில்,
'ஓம் ஹோம் ஈசானமூர்த்தாயநம:' என்று வடகிழக்கிலும்,
'ஓம் ஹேம் தத்புருஷமூர்த்தாயநம:' என்று கிழக்கிலும்,
'ஓம் ஹூம் அகோரமூர்த்தாயநம.' என்று தெற்கிலும்,
'ஓம் ஹிம் வாமதேவமூர்த்தாயநம.' என்று வடக்கிலும்,
'ஓம் ஹம் சத்யோஜாதமூர்த்தாயநம.' என்று மேற்கிலும்
நியசிக்க.

---

## உஎ. வத்திரபங்கி

பெருவிரலோடு கூடிய சுட்டுவிரலினாலே,
'ஓம் ஹோம் ஈசானவத்திராயநம.' என்று வடகிழக்கிலும்,
'ஓம் ஹேம் தத்புருஷவத்திராயநம;' என்று கிழக்கிலும்,
'ஓம் ஹூம் அகோரவத்திராயநம:' என்று தெற்கிலும்,

'ஓம் ஹிம் வாமதேவ வத்திராயநம:' என்றுவடக்கிலும், 'ஓம் ஹூம் சத்தியோஜாதவத்திராயநம:' என்றுமேற்கிலும் திருமுகங்களில் நியசிக்க.

---

## உஅ. வித்தியாதேக நியாசம்.

புஷ்பங்களினால் அஞ்சலியை நிறைத்து, இருதய தானத்தில் வைத்துக்கொண்டு,

உச்சிமுக மீசான மொளிதெளியப் பளிங்கே
யுத்தரபூ ருவதிசையை நோக்கியுறுமுகந்தே
நிச்சயித்த முகத்தின்கீழ்ப் பூர்வதிசை நோக்கி
நிகழுமுகந் தற்புருடங் கோங்கலர்போ னிறமே
யச்சுறுத்து மகோரமுக மறக்கரிது கராள
மவிழ்தாடி வலத்தோளிற் றென்னோக்கி யமருஞ்
செச்சைநிறத் தெரிவைமுக மிடத்தோண்மேல் வாமஞ்
சிறுபுறத்தின் முகஞ்சத்தி யோசாதந் திகழ்வால்.

திருவுருவந் தெளிபளிங்கு சடாமகுடத் திதழி
சிறுபிறையு மூவைந்து திருநயனம் வலப்பாற்
கரதலத்திற் சத்தியப யஞ்சூல நீண்ட
கட்டங்கந் தமருகமு மற்றையிடக் கரத்தின்
வரதமுமா துளங்கபலம் போகிசெப மாலை
மணமலிநீ லோற்பலமு முடையர்வய நீரெட்
டுருவிரட்டி யுறுப்பிரண்டு பதம்பதுமா தனந்தா
னுறவிருப்பர் சதாசிவர்தத் துவதவிசி னுகந்தே.

என்று சத்தி மாத்திரத்தாற் சகளீகரித் திருப்பவரா யிருக்கிற பரமேசுவரனை மூர்த்தியினிடத்தில் நினைத்து, 'ஓம் ஹாம் ஹௌம் வித்தியாதேகாயநம:' என்றுச்சரித்து, அப்புஷ்பாஞ்சலியைப் பிரமரந்திரம் வரையும் மெல்லென உயர்த்திக்கொண்டுபோய், அவ்விடத்தினின்றும் அவ் வித்தியாதேகம் மின்னிறமுடையதாகித் தனது புஷ்பாஞ் சலியினுள்ளே வந்ததாகத் தியானித்து, இருதயத் தானம்

வரையும் மெல்லென இறக்கிக் கொண்டுவந்து, சிவலிங்காகாரத்தைப் பாவியாது விடுத்து, மேற்சொல்லிய ஐந்து முகம் பதினைந்து கண் முதலியவற்றையுடைய வித்தியாதேக பரமேசுரனையே பாவித்து, சிவலிங்கத்தினது நெடுமையாகிய மூர்த்தியிலே நியாசஞ் செய்க. ஈசான முதலிய ஐந்து முகங்களிலும், நடுவிரல் மூன்றினாலும் 'ஓம் ஹௌம் நேத்திரேப்யோநம:' என்று நியசிக்க.

---

## உகூ. சிவ ஆவாகனக்கிரமம்

புஷ்பங்களால் அஞ்சலியை நிறைத்து, இருதயத் தானத்தில் வைத்துக்கொண்டு, பிராசாதமந்திரக் கிரமமாக 'ஓம் ஹாம் சிவாயநம:' என்று உச்சரித்துத் துவாதசாந்தத்தின் மேலே பஞ்சாக்ஷரத்தின் பொருளாகிய அப்பரமசிவனை நிஷ்கள ரூபமாகவும், ஞானானந்த மயராகவும் சர்வ கர்த்தாவாகவும், சர்வ வியாபகராகவும் நினைத்து, அப் புஷ்பாஞ்சலியைத் துவாதசாந்தம் வரையும் மெல்லென உயர்த்திக் கொண்டுபோய், துவாதசாந்தத்தினின்றும் சூரியப் பிரபையுடையவராகப் புருவ நடு வரையும் இறக்கி, கோடி சந்திரப் பிரகாசமுடையவராகத் தியானித்து, வல மூக்கு வாயிலாக இரேசக பாவனையினாலே புறப்பட்டு, புஷ்பாஞ்சலியினுள் வந்ததாகப் பாவித்து, இலிங்கத் திருமுடியிலே 'ஓம் ஹாம் இருதயாய நம:' என்று * ஆவாகன முத்திரையால் ஆவாகிக்க. அம் மந்திரங் கொண்டே † தாபன முத்திரையால் தாபனமும், ஸந்நிதான முத்திரையாற் சந்நிதானமும், நிஷ்டுர

---

* அஞ்சலி தன்னி லணிவிர லிரண்டினும்
விஞ்சிய வங்குட்ட மெய்திலா வாகனம்.

† மேவுமஞ் சலிதனை விரித்ததோ முகமுறத்
தாபனஞ் செய்வது தாபன முத்திரை.

பெருவிர லுயர்ந்திடப் பிடித்தகை முட்டிகள்
சரிவுற வளைத்திடிற் சந்நிதா னமதாம்.

அன்னசந் நிதானத் தசுமுரப் பெருவிரல்
தன்னையுண் மறைப்பது சந்நிரோ தனமே.

முத்திரையினலே சந்நிரோதனமும் செய்து, "மகா தேவரே! உமக்கு நல்வரவாகுக" என்று விஞ்ஞாபித்து, பின்னர்க் "குழந்தாய்! நன்கு வந்தோம்" என்று பரம சிவனற் சொல்லப்பட்டதாக நினைத்து, சர்வ லோகைக நாயகராகிய சுவாமின்! சிறியேன் செய்யத் தொடங்கிய பூசை முடியும் வரையும் இவ்விலிங்கத்திலே பிரீதியோடு சாந்நித்தியராய் இரும்" என்று விஞ்ஞா பனம் பண்ணி, ஈசான முதலிய ஐந்து திருமுகத்திலும் சுவாகதார்க்கியம் கொடுத்து, *காளகர்ணிக முத்தி ரையும் †இலிங்க முத்திரையும் ‡நமஸ்கார முத்திரையும் கொடுக்க.

---

## ௩0 இருதயாதி நியாசம்

பெரு விரலோடு கூடிய சிறு விரலினலே இருதயத் திலே 'ஓம் ஹாம் இருதயாய நம:' என்றும், பெரு விர லோடு கூடிய அணி விரலினலே திருமுடியிலே 'ஓம் ஹீம் சிரசே நம:' என்றும், பெரு விரலோடு கூடிய நடு விரலின லே சிகையிலே 'ஓம் ஹூம் சிகாய நம:' என்றும் நிய சித்து, இரண்டு சுட்டு விரல்களினலும் கழுத்தை மூலே நடு வாக 'ஓம் ஹைம் கவசாய வௌஷட்', என்று சுற்றி, அணி விரலினலே உள்ளங் கைகளிலே, 'ஓம் ஹ: அஸ்திராய

---

* உறுமிரு கைவிர லுள்ளுறக் குவித்துச்
சிறுவிரன் முதலாச் செறிந்தநால் விரலினுக்
துன்றிரு பெருவிர றெட்டுற நிமிர்ந்திடிற்
கைந்நிகழ் காளகர்ணிமுத் திரையே.

† அடுத்திடு மிடக்கையி லங்குட் டந்தனைப்
பிடித்திடு வலக்கைப் பெருவிர னிமிர்த்தாங்
கசைவற விடக்கையி லங்குலி களைவளைத்
திசைவுறப் பிடித்திடி னிலிங்கமுத் திரையே.

‡ பெருவிர லிரண்டும் பிணைந்திட நிமிர்ந்தே
கரமிரண் டுறினமக் காரமுத் திரையே.

பட்' என்று நியசித்து' 'ஓம் ஹாம் சிவாய நம:' என்று ஐக்கியஞ் செய்து, 'ஓம் ஹ: அஸ்திராய நம:' என்று இரட்சை செய்து, சுட்டுவிரல் நீட்டிய கையினல் 'ஓம் ஹைம் கவசாய வௌஷட்' என்று அவகுண்டனஞ் செய்து, 'ஓம் ஹாம் சிவாய வௌஷட்' என்று தேனு முத்திரையும் மகா முத்திரையும் கொடுத்துப் பரமீகரணம் பண்ணி, *பஞ்சமுகி முத்திரையும் கொடுக்க.

---

## ருக. பாத்தியாதி

விசேஷார்க்கிய பாத்திரத்தை எடுத்து இடக்கையில் வைத்துக்கொண்டு, வலக்கையின் மிருக முத்திரையினலே 'ஓம் ஹாம் சிவாய நம:' என்று இரண்டு திருவடியிலும் இரண்டுதரம் பாத்தியமும், 'ஓம் ஹாம் சிவாய சுவதா' என்று ஈசான முதலிய ஐந்து திருமுகத்திலும் பதினைந்து தரம் ஆசமனமும், 'ஓம் ஹாம் சிவாய சுவாஹா' என்று ஐந்து திருமுடியிலும் ஐந்துதரம் அர்க்கியமும் கொடுக்க.

---

## ருஉ. புஷ்பதானம்

'ஓம் ஹாம் சிவாயவௌஷட்' என்று புஷ்பங்களும் அக்ஷதையும் அறுகும் கூட்டிச் சாத்துக.

---

## ருரு. மானசாபிஷேகம்

(சிறு விரலுக்கும் அணி விரலுக்கும் நடுவே ஒரு புஷ்பம் எடுத்துக்கொண்டு பெருவிரல் சுட்டுவிரல்களினலே 'ஓம் ஹ: அஸ்திராயபட்' என்று இலிங்கத்தினது

---

* தன்னினுட் கோத்தகைத் தர்ச்சனி பெருவிரல்
மன்னிய நடுவிரன் மணிச்சிறு விரல்களை
ஆங்குறப் பிடித்தபின் னணிவிர லினைநடுப்
பாங்குற நிமிர்ப்பது பஞ்ச முகமே.

திருமுடியிலுள்ள புஷ்பங்களை இறக்கி 'ஓம் ஹாம் சிவாய நம:' என்று நவ புஷ்பத்தை மேலே சாத்திக் கைகழுவிக் கொண்டு) எண்ணெய்க் காப்பு மாக்காப்பு முதலிய அபிஷேக திரவியங்களை மனசினாலே பாவித்து, 'ஓம் ஹாம் சிவாய சுவாகா' என்று புறம்பே பாவனபிஷேகம் பண்ணி, விசேஷார்க்கிய ஜலத்துளியினாலே புரோக்ஷித்து பாத்தியாசமனார்க்கியம் கொடுத்து, 'ஓம் ஹைம் கவசாய வௌஷட்' என்று மெல்லிய திருவொற்றாடை சாத்தி, 'ஓம் ஹாம் சிவாய நம:' என்று விபூதி சாத்துக.

---

## ௩௪. சந்தனாதி

'ஓம் ஹாம் சிவாயநம:' என்று சந்தனமும் 'ஓம் ஹாம் சிவாய வௌஷட்' என்று அக்ஷதையும் அறுகும் வில்வமும் புஷ்பமும் அணிந்து, பொன்னரைஞாணும் பொற்கௌபீனமும் விசித்திர வஸ்திரமும் பொற்பூணூலும் குண்டல முதலிய ஆபரணமும் மனப்பக்தியினாலே நிவேதிக்க.

---

## ௩௫. புஷ்பாஞ்சலித் திரயாதி

பிறகு

ஓம் ஹாம் ஹௌம் ஆத்துமதத்துவாதிபதயே சிவாய் நம:
" வித்தியா தத்துவாதிபதயே சிவாயநம:
" சிவதத்துவாதிபதயே சிவாய நம:

என்று புஷ்பாஞ்சலித் திரயம் கொடுத்து, திரும்பவும், மூலத்தா லருச்சித்து இண்டை முதலிய மாலைகளணிந்து, அஸ்திரத்தால் மணியடித்து, தூப தீபம் கொடுத்து

ஆசமனர்க்கியம் சமர்ப்பித்து, 'சிவாயவௌஷட்' என்று *மனோரதமுத்திரை காட்டுக.

## ௩௬ லயாங்கம்

பஞ்சப் பிரம ஷடங்க மந்திரங்களினாலே சிரம், முகம் முதலிய லயஸ்தானங்களிலே பூசை செய்து, மனசில் விரும்பியவைகளை விண்ணப்பஞ்செய்க.

## ௩௭. மனோன்மனிபூசை

சிவபெருமானுக்கு ஈசான திக்கிலே, 'ஓம் ஸ்ரீம் ஹறீம் மனோன்மன்யாசனாய நம:' என்று பூசித்து, அதன்மேலே மனோன்மனி மூர்த்தியைத் தியானித்து, 'ஓம் ஹ்றீம் மனோன்மனி மூர்த்தயே நம:' என்று பூசித்து, 'ஓம் ஹ்றீம் மனோன்மன்யைநம:' என்று அம்மூர்த்தியிலே மனோன்மனியை ஆவாகித்து, 'ஓம் ஹறீம் மனோன்மன்யை சுவாகா:' என்று அர்க்கியம் கொடுத்து, சந்தனம் முதலியவற்றாற் பூசிக்க.

## ௩௮. போகாங்க பூசை

"போகாங்க பூசைசெய்கிறேன்" என்று பிரார்த்தித்து அனுஞ்ஞை பெற்றுக்கொண்டு, சிவபெருமானை 'ஓம் ஹாம் சிவாய நம:' என்று ஒருதரம் பூசித்து,

'ஓம் ஹோம் ஈசான மூர்த்தாயநம:'

என்று வடகிழக்குத் தளத்திலும்,

'ஓம் ஹேம் தத்புருஷவத்திராயநம:'

என்று கிழக்குத் தளத்திலும்,

'ஓம் ஹும் அகோரஹ்ருதயாயநம:'

என்று தெற்குத் தளத்திலும்,

* இருகையங் குலிகளை யெதிர்முகத் துள்ளுறச்
செருகிய பின்பிணைச் செங்கைகள் கூட்டி
நீடுதர்ச் சனிக ணிமிர்ந்துறப் பெருவிரன்
மூடிடின் மனோரத முத்திரை யாகும்.

'ஓ ஹிம் வாமதேவகுஹ்யாயநம:'
என்று வடக்குத் தளத்திலும்,
'ஓம் ஹும் சத்யோஜாதமூர்த்தயேநம:'
என்று மேற்குத்தளத்திலும்,
'ஓம் ஹௌம் நேத்திரேப்யோநம:
என்று வடகிழக்குத் தளத்தில் ஈசானதேவருக்கு வடபக்கத்திலும்,
'ஓம் ஹாம் இருதயாயநம:'
என்று தென்கிழக்குத் தளத்திலும்,
'ஓம் ஹீம் சிரசேநம:'
என்று வடகிழக்குத் தளத்தில் நேத்திரத்துக்கு வடபாகத்திலும்,
'ஓம் ஹூம் சிகாயைநம:'
என்று தென்மேற்குத் தளத்திலும்,
'ஓம் ஹைம் கவசாயநம:'
என்று வடமேற்குத் தளத்திலும்,
'ஓம் ஹ: அஸ்திராயநம:'
என்று, கிழக்கு முதலிய நாற்றிசைத் தளங்களிலே தற்புருட தேவர் முதலாயினோருக்கு இடப் பக்கத்திலும் ஈசான தேவர் முதலாயினோரைச் சிவபெருமானுடைய லயாங்கந்தோறும் எடுத்துப் பூசித்து, அவ்வவர் மந்திரங்களினாலே சுவாகாந்தமாக அர்க்கியங் கொடுத்து, ஈசான முதலிய பஞ்சப் பிரமங்களுக்கு முறையே தேனு, *பத்மம், திரிசூலம், மகரம், சிருக்கு என்னும் முத்திரைகளையும்

---

* பிணித்தகை விரித்துப் பெருவிர லிணைநடுப்
பணித்திடப் பிடிப்பது பதுமமுத் திரையே.
பெறுகரங் கோத்தபின் பெருவிர னடுவிரல்
சிறுவிர னிமிர்ப்பது திரிசூ லம்மே.
திரிசூ லந்தனிற் செறித்ததற் சனியினை
மருவகா மிகையுற வளைத்திடின் மகரம்.
காண்டகு மகரக் கனிட்டையுள் வைத்துத்
தூண்டிடிற் பெருவிரல் சுருக்குமுத் திரையே.

அங்க தேவர்களுக்குத் தனித்தனி நமஸ்காரமுத்திரையையும் அவ்வவர் இருதய ஸ்தானத்திலே அவ்வம் மந்திரத்தினலே காட்டி, சிவபெருமானுக்கு மூலமந்திரத்தாற் புஷ்பாஞ்சலி கொடுத்து, மகாமுத்திரை காட்டி, இவர்களெல்லாரும் சிவபெருமானேடு ஒற்றுமைப்பட்டவர்களாகப் பாவிக்க.

---

## ௯௯. நைவேத்தியாதி

'ஓம் ஹாம் சிவாயசுவாகா' என்று தூபமும் தீபமுங் கொடுத்துக் கைகழுவி, முன்போல் ஆசமனமும் அருக்கியமுங் கொடுத்து, நைவேத்தியத்தை விசேடார்க்கியத்தினலே புரோக்ஷித்து, நிரீக்ஷணதி சுத்திசெய்து, புஷ்பத்தோடு கூடிய மிருகி முத்திரையினலே, 'ஓம் ஹாං சபரிவாராய சிவாய சுத்தான்னம் நைவேத்தியம் சுவாகா' என்று நிவேதித்துக் கைகழுவி, 'ஓம் ஹாං சபரிவாராய சிவாய பானீயம் சுவாகா' என்று பானீயம் கொடுத்து, கைகழுவி ஆசமனம் கொடுத்து, 'ஓං ஹைං கவசாய வௌஷட்' என்று சந்தனப் பொடியினலே திருக்கைகளைத் துவட்டி, 'ஓம் ஹாං சபரிவாராய சிவாய தாம்பூலம் நைவேத்தியம் சுவாகா' என்று தாம்பூலம் நிவேதித்துக் கைகழுவி அர்க்கியம் கொடுத்து, மூலமந்திரத்தால் பூசித்துத் தூபதீபாசமனர்க்கியம் கொடுக்க.

---

## ௬0. பவித்திரதானம்

புஷ்பங்களும் அறுகும் அட்சதையும் நிறைந்த அஞ்சலியினலே 'ஓம் ஹாம் ஹௌං சர்வதத்துவாதிபதயே சிவாய நம:' என்று சிவபெருமானுக்குப் பவித்திரம் சாத்துக.

---

## ௪௧. ஆராத்திரிகாராதனுதி

'ஓம் ஹைம் கவசாய சுவாகா' என்று கருப்பூராராத்திரிகம் பணிமாறப் பண்ணிக் கைகழுவி ஆசமனர்க்கியம் கொடுத்து, விபூதி, தருப்பணம், சத்திரம், சாமரம், தாலவிருந்தங்களைச் சமர்ப்பித்து, ஆசமனர்க்கியங் கொடுத்து, அநந்தாதிகளினுல் தோத்திரம் பண்ணப்பட்டவராயும் சந்துஷ்டராயுமுள்ள சிவனைத் தியானம் பண்ணி, பதினறு கலைப் பிராசாதத்தோடு கூடிய மூலமந்திரத்தாலே, புஷ்பாஞ்சலித்திரயம் சாத்தி, மகாமுத்திரையும் பஞ்சமுகி முத்திரையுங் கொடுக்க.

---

## ௪௨. அருச்சனை

ஓம் 'பவாய தேவாய நம:'
,, 'சர்வாய தேவாய நம:'
,, 'ஈசானுய தேவாய நம:'
,, 'பசுபதயே தேவாய நம:'
,, 'உக்கிராய தேவாய நம:'
,, 'ருத்திராய தேவாய நம:'
,, 'பீமாய தேவாய நம:'
" 'மகதே தேவாய நம:'

என்று சிவபெருமானையும்

ஓம் 'பவஸ்ய தேவஸ்ய பத்தினியைநம:'
" 'சர்வஸ்ய தேவஸ்ய பத்தினியைநம:'
" 'ஈசானஸ்ய தேவஸ்ய பத்தினியைநம:'
" 'பசுபதே தேவஸ்ய பத்தினியைநம;'
" 'உக்கிரஸ்ய தேவஸ்ய பத்தினியைநம:'
" 'ருத்திரஸ்ய தேவஸ்ய பத்தினியைநம:'
" 'பீமஸ்ய தேவஸ்ய பத்தினியைநம:'
" 'மகத தேவஸ்ய பத்தினியைநம:'

என்று மனேன்மனியையும் அருச்சித்து,

'ஓம் மீனுட்சியம்பா சமேத சொக்கநாத சுவமினே சிவாய மந்திர புஷ்பாணி சமர்ப்பயாமி' என்று சிவபெருமானுக்கு வில்வம் புஷ்பம் சாத்துக.

---

## சுங. செபதானம்.

'ஓம் ஹாம் இருதயாயநம:' என்று செப மாலையைப் பூசித்து, ஒரு பத்திரத்திற் புஷ்பமெடுத்து, இடக்கையில் வைத்துக்கொண்டு, விசேஷார்க்கியத்தினுலே புரோக்ஷித்துச் செபமாலையை எடுத்து வலக்கை அநாமிகையில் வைத்துப் பரிவட்டத்தினுல் மூடிக்கொண்டு, பெருவிரலினுல் ஒவ்வொரு மணியாக இழுத்துச் சிவமூல மந்திரத்தை நூற்றெட்டுத்தரம்செபித்து, செபமாலையை வைத்துவிட்டு இடக்கையில் இருக்கும் புஷ்பத்திற்கு'ஓம் ஹ: ஹைம் ஹாம்' என்னும் பீஜங்களை நியசித்து, இருதயகவச அஸ்திர மந்திரங்களினுல் சம்புடம் பண்ணி, அஸ்திரத்தால் இரட்சையும் கவசத்தால் அவகுண்டனமுஞ் செய்து, அதனை வலக்கையிற் பற்றிக்கொண்டு விசேடார்க்கிய சலங்கூட்டி * உற்பவ முத்திரையினுல் வலமுழந்தாளை நிலத்திலூன்றி, 'ஓம் ஹாம் இருதயாய சுவாகா' என்று செபமும், கர்மமும், ஆன்மாவுமாகிய மூன்றையும் சிவபெருமானுடைய வரத அஸ்தத்திலே நிவேதித்துப், பின்பு செபித்த புஷ்பத்தை மூலத்தினுலே சாத்திப பின்பு சங்கிதா மந்திரத்தைப் பத்துத்தரம் செபித்து நிவேதித்துச் சாத்துக.

---

## சுச. காமிய மந்திரபூசை.

காமியமந்திர பூசையின் பொருட்டு விஞ்ஞாபனம் செய்து, அனுமதி பெற்றுக்கொண்டு, சிவாசன பத்மதைட்

---

* சிறுவிர னீட்டிச் சிறந்தசர்ச் சனியுட
னுறுபெரு விரலூடி னூற்பவ முத்திரை.

சிண தளா நதியின் கீழ்ப்புறத்தில் ஸ்திரீ ரூபமான கௌரியாதி மந்திரங்களையும், மேற்கில் பும் ரூபமான மிருத்யுஞ்சயாதி மந்திரங்களையும், முன்னிலையில் ஸ்திரீ பும் ரூபமான உமா மகேசுராதி மந்திரங்களையும் அர்ச்சித்துச் செபித்துச் சமர்ப்பிக்க.

---

## ௪௫. குருபூசை.

சிவலிங்கப்பெருமானுக்குத் தென்கிழக்கே 'ஓம் ஹாம சிவாசனய நம:' என்று பூசித்து, அதன்மேலே தன் குருவைச் சிந்தித்து, 'ஓம் ஹாம ஹாம் ஹாம சிவமூர்த்தயே நம:' என்று பூசித்து, அம் மூர்த்தியிலே 'ஓம் ஹாம் சிவாயநம:' என்று சிவபெருமானை ஆவாகித்து, பாத்தியம் முதலியவைகளைக் கொடுத்து, சந்தனம் புஷ்பம் சாத்தித் தோத்திரம் செய்க.

---

## ௪௬. வித்தியாபீட பூசை.

சிவலிங்கப்பெருமானுக்கு மேற்கே 'ஓம் ஹாம யோகபீடாய நம:' என்று ஆசனம் பூசித்து, அதிலே 'ஓம் ஹாம வித்தியாபீடாய நம:' என்று சிவாகமத் திருமுறையைப் பூசித்துச் சாமாணியார்க்கியங் கொடுத்துத் தோத்திரம் செய்க.

---

## ௪௭. அஞ்சலிஸ்துதி.

மூலமந்திரத்தினலே சிவபெருமானுக்குப் புஷ்பாஞ்சலித்திரயங் கொடுத்துச் சிரசிலே கும்பிட்டுக்கொண்டு இயன்றமட்டும் தோத்திரம் செய்க.

---

## ௪௮. பிரதக்ஷிண நமஸ்காரம்.

எழுந்து சிரசிலே கைகுவித்துக்கொண்டு, மூன்றுதரம் பிரதக்ஷிணம் செய்து, சந்நிதானத்திலே இரண்டு கைகளினாலும் புஷ்பங்களைத் தூவி, மூன்றுமுறை சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்க.

---

## ௪௯. துவிதியாதி காலபூசை.

இருந்து கைகழுவிக்கொண்டு, மத்தியான்னபூசையின் பொருட்டு ஒரு தரமும், சாயங்கால பூசையின் பொருட்டு ஒரு தரமுமாக இரண்டுதரம் சிவபெருமானைச் சிவாசன மூர்த்தி மூலங்களினாலும் போகஸ்தான நாதர்களை அவரவர் மந்திரங்களினாலும் பூசித்து, அட்டபுஷ்பஞ் சாத்துக.

---

## ௫௦. அக்கினி பூசை.

அக்கினிகாரியஞ்செய்ய அதிகாரமில்லாதவர் சிவபெருமானுக்கு ஆசனமந்திரம் மூர்த்திமந்திரம் மூலமந்திரம் நேத்திரமொழிந்த அங்கமந்திர பஞ்சகம் என்னும் எட்டுமுடைய அஷ்ட புஷ்பங்களைப் பூமியில் வலமுழந்தாளை ஊன்றிச் சாத்திப் பராமுகார்க்கியங் கொடுக்க. அக்கினிகாரியஞ் செய்ய அதிகாரமிருந்தும், திரவியங்களைச் சேகரிக்கச் சக்தியற்றவர் ஓமஞ்செய்யும் கணக்கிலிருந்து, பத்துமடங்கு கூட்டிச் செபித்து நிவேதிக்க.

---

## ௫௧. பூசா சமர்ப்பணம்.

பின் அஷ்டபுஷ்பத்தாற் பூசித்துப் பஞ்சமுகி முத்திரை கொடுத்துச் சத்தியோசாதமுக முதலிய ஐந்து முகங்களிலும் 'ஓம் ஹாம் சிவாய நம:' என்று புஷ்பம் சாத்திச் சத்தி

யோசாதாதிக் கிரமமாக 'ஓம் ஹாம் சிவாயசுவாகா:' என்று பராமுகார்க்கியங் கொடுத்து, போகாங்க தேவர்களுக்கு அஸ்திரமுதல் ஈசானமீருகப் பராமுகார்க்கியங் கொடுத்து, காமிய மந்திரங்களை அவ்வவ் வவயவங்களில் யோசிக்க.

போகாங்க மந்திரங்களை 'ஓம் ஹ: அஸ்திராயஹூம்பட்' என்று நாராச முத்திரையினலே புஷ்பத்தைத் தெறித்து, மின்போல எழும்பினவைகளாகப் பாவித்து, 'ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம:' என்று திவ்வியமுத்திரையினலே சிவமூர்த்தியாகிய இலிங்கத்திலே யோசித்து மூலமந்திரத் தாற் பூசித்து, சிவாசன மந்திரங்களை 'ஓம் ஹ: அஸ்திராய ஹூம்பட்' என்று நாராசமுத்திரையினலே புஷ்பத்தைத் தெறித்து எழுப்பி, 'ஓம் ஹாம் சிவாசனயநம:' என்று *திவ்விய முத்திரையினலே சிவாசனமாகிய பீடத்திலே யோசித்து, 'ஓம் ஹாம் சிவாயநம:' என்று சிவபெருமானை ஒருதரம் பூசித்து, 'ஓம் ஹாம் சிவாய சுவாகா' என்று அருக்கியம் கொடுத்து, "சுவாமி அடியேன் அறியாதுசெய்த அபசாரத்தைப் பொறுத்தருளுக" என்று பிரார்த்தித்துக்கொள்க.

'ஓம் ஹ: அஸ்திராயபட்' என்று திக்குபந்தனமும், 'ஓம் ஹைம் கவசாயவௌஷட்' என்று அவகுண்டனமும்பண்ணி, 'ஓம் ஹாம் சிவாய வௌஷட்' என்று தேநுமுத்திரை கொடுத்துச் சிவபெருமானை 'ஓம் ஹாம் சிவாய நம:' என்று சங்கார முத்திரைகொண்டு இடமூக்கிற் பூரக வாயுவினலே இருதயத்தில் ஒடுக்கிக்கொள்க.

---

## ௫௨. குருவாதி விசர்ச்சனம்.

தன் குருவுக்கும், வித்தியாபீடத்துக்கும், பிரமாமுதற் சதாசிவன் இறுதியாகிய சத்தகுரவருக்கும், மகாலக்ஷ

---

* அம்மலர் சாத்தற் கனுமிகை பெருவிரல்
செம்மையிற் செறிப்பது திவ்விய முத்திரை.

மிக்கும், கணபதிக்கும், துவார தேவர்களுக்கும் சாமானியார்க்கியங் கொடுத்து, அவர்களைச் சங்கார முத்திரையினாலே இருதயத்தில் ஒடுக்கிக்கொள்க.

---

## (கூ) சண்டேசுர பூசை.

'ஓம் சண்டாஸநாய ஹூம்பண்ணம:' என்று ஆசனத்தைப் பூசித்து, அதன் மேலே சண்டமூர்த்தியைத் தியானித்து, 'ஓம் சண்டமூர்த்தயே ஹூம்பண்ணம:' என்று பூசித்து, 'ஓம் சண்டநேத்திரேப்யோ ஹூம்பண்ணம:' என்று நேத்திரங் கொடுத்து, 'ஓம் த்வனி சண்டேசுவராய ஹூம்பட் சுவாகா' என்று ஆவாகித்து, விசேஷார்க்கியம் கொடுத்து, சிவபெருமானுக்குச் சாத்திய நிர்மாலிய புஷ்பங்களைச் சாத்தி, சிவபெருமானுக்கு நிவேதித்த அன்னமுதலியவற்றை நிவேதித்து, அருக்கியங் கொடுத்து, சண்டேசுர மூலமந்திரத்தைப் பத்துத்தரம் செபித்து, நிவேதித்துச் சாத்தி, "சிவபூசையில் வந்த குறை மிகைகளால் உண்டாகிய குற்றங்களைப் பொறுத்துக்கொண்டு, சிவபூசாபல முழுதும் தந்தருளுக" என்று மூன்றுதரம் கைகொட்டி மூலத்தினால் ஒரு புஷ்பஞ்சாத்தி, பராமுகார்க்கியங் கொடுத்து, அவரைச் சங்காரமுத்திரைகொண்டு, இடநாசியிற் பூரக வாயுவினால் இருதயத்தில் ஒடுக்கிக்கொள்க.

---

### அர்க்கிய விசர்ச்சனம்.

அருக்கிய பாத்திரங்களில் இருக்கும் மந்திரங்களை எழுப்பிக் கூட்டி இருதயத்தில் ஒடுக்கி, நின்மாலியத்தைக் கழித்துப் பூமியைக் கோமயத்தினாலே சுத்திசெய்து அஸ்திரத்தினாலே புரோக்ஷிக்க.

---

## அகோர மந்திர செபம்.

பின்பு வெளிவந்து பாதங்களைக் கழுவி ஆசமனம் பண்ணி விபூதி தரித்துக் குட்டிக்கும்பிட்டு, பிராணாயாமம் சகளீகரணம் செய்து, சமஸ்த சிவபூசாபலமும் பெறுதற் பொருட்டு அகோரமந்திரத்தை இருபத்தொருதரம் செபிக்க்க. பின்பு கபிலபூசைசெய்து போசனம்பண்ணுக.

சிவபூசாவிதி முற்றிற்று.

வாசநலஞ் செய்திமையோர் நாடோறு மலர்தூவ
ஈசனெம் பெருமானு ரினிதாக வுறையுமிடம்
யோசனைபோய்ப் பூக்கொணர்ந்தங் கொருநாளு மொழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே.

திருச்சிற்றம்பலம்.

